ாநதஞறகாபபாறறபபடாத ஜனஙகள எனனபாவம செயதாலும நதபபாவததில நாலிலஒருபாகததை அரசன அடைகிறுன, சிலா நதபபாவமெலலாவறறையும அடைகிருனெனறும, சிலா அதிற திியை அடைகிருனெனறும சொலலுகினறனா, மனுவின சாஸ ரததைககேடட நமககுமட்டும நாலில ஒருபாகம எனனும மதந ன நிசசயம பாரதனே! அரசனல நனறுகக காபபாறறபபட்ட னஙகளசெயயும புணணியகாமததிலும நாலில ஒருபாகததையே வன அடைகிறுன யுதிஷடிர! மேகததை அனுஸரிதது எலலாப ராணிகளும ஜீவிபபதுபோலவும, பெரியவிருக்ஷததைஅடுதது பக்ஷி ா ஜீவிபபதுபோலவும நீ ஜீவிபபதை அனுஸரிததுக குடிகளெலலாம் விககககடவன வீரனே! ராக்ஷஸாகள குபேரனையும தேவாகள நதிரனையும அடுதது ஜீவிபபதுபோல உறவினரும சினேகிதாகளும னனை அடுதது ஜீவிககககடவா" என்ருா

---

தொணணூறறேழாவது அதயாயம

## தானதாமபாவம். (தொடர்ச்சி)

(பூமிதானத்தின்சிறப்பும், பிருஹஸ்பதி இந்திரனுக்குத் தானங்களைப்பற்றிச்சொலலியதும்)

யுதிஷடிரா, "வேதவிதிகள, 'இதைக கொடுககவேணடும, தைககொடுககவேணடும' எனறிருபபதனல அரசாகள கொடுகக வணடியவை அனேகமிருககினறன அவை எலலாவறறிலுஞ றநததான கொடுககததககபொருள யாது?" எனறுகேடக, பீஷமா சாலலலாஞா

"பூமிதானமானது எலலாததானஙகளிலும மேறபடடதாகச சொலலபபடுகிறது பூமியானது அசைவறறது, அழிவறறது, யாநதபோகஙகளைக கொடுபபது வஸதிரஙகளையும ரததினஙகளை, ம பசுககளையும நெல யவைமுதலியதானியஙகளையும பூமி கறக றது எலலாபபிராணிகளிலும பூமிதானம செயபவனதான நெடுங ாலம மேனமை அடைவான இவவுலகததில பூமிதானமசெயபவன மியின ஆயுள எவவளவுகாலமோ அவவளவுகாலம விளஙகிககொண ருபபான யுதிஷடிர! இவவுலகததில பூமிதானததிறகு மேறபடட தானறுமிலலை எலலாரும பூமியிலகொஞசபாகமாவது தானம சயதிருககினறனரெனறு நாம கேடடிருககிரேம். பூமியைச

கொடுத்தஜனங்கள் தாம் பூமியை அனுபவிக்கின்றனர். மனிதர்கள் இம்மையிலும் மறுமையிலும் தம்வினையையே பற்றியிருக்கின்றனர். பூமியென்னும் மகாதேவி தன்னைக்கொடுப்பவனைத் தனக்கன்பனை, கணவனுக்கச்செய்துகொள்ளுகிறாள் ராஜஸ்ரேஷ்டனே! அழிவில்லாத இந்தப்பூமியைத் தக்ஷிணையாகக்கொடுப்பவன் மறுபடியும் மானிட ஜன்மமெடுத்துப் பூமிக்கரசனுவான் இவன்கொடுக்கிறபடிதான் இவனுக்குப் பின்னுல் அனுபவமுண்டாகிறதென்பது தாமசாஸ்திரங்களின் துணிபு யுத்தத்தில் தேகத்தையாவதுவிடவேண்டும், பூமியையாவது தானம்செய்யவேண்டுமென்பதைத்தான் க்ஷத்திரிய ஜாதியிற் பிறந்தோர்களுக்குச் சிறந்த ஆசீர்வாதமாகக் கூறுகின்றனர். தானம் செய்யப்பட்ட பூமியானது பாவச்செய்கையுள்ளவனுக்கும் பிரம்மஹத்திசெய்தவனுக்கும் பொய்யனுக்குமிருந்தாலும் தானம்செய்பவனைப் பரிசுத்தனுக்கச்செய்யுமென்று நாம் கேட்டிருக்கிறோம் அது தான் பாவத்தைப்போக்குவது அதுதான் பாவத்திலிருந்து மனிதனை விடுவிப்பது பாவஞ்செய்த ராஜாக்களிடத்திலும் பூமியை மட்டும் ஸாதுக்கள் வாங்கிக்கொள்ளுவார், வேறு ஒன்றையும் விரும்பார் ஏனெனில், பூமியானது பரிசுத்தமானது இந்தப்பூமிதேவிக்குப் [1] பிரியத்தத்தையென்னும்பெயர் ரகஸ்யமும்அழியாததுமாயிருக்கிறது ஏனெனில், அதைக் [2] கொடுப்பதும் வாங்குவதும் மிகவும் பிரியமானவை இந்தப்பூமியை வித்வானுக்குத்தானம்செய்யும் அரசன், பூமியில் இப்போது இருப்பதைவிட அதிகஸ்வகமானராஜ்யாதிபத்தியத்தை அடைவான் அவன் மறுஜன்மத்திலும் அரசனுகவே இருப்பானென்பதில் ஸந்தேகமில்லை ஆதலால், அரசன் பூமியை அடைந்தவுடனே அதைப் பிராம்மணனுக்குத் தானம் செய்யவேண்டும் அரசனல்லாதவன் பூமியை [3] ஆளுவது எவ்வகையிலும் முடியாது பூமியை வஸ்திரத்தினுலும் மூடமுடியாது, வேறுவிதமாக மறைத்துக்கொண்டு [4] போகவுமாகாது பூமியை விரும்புகிற மற்றவர்களும் இப்படி (தானம்) செய்யவேண்டுமென்பதில் ஸந்தேகமில்லை யோக்கியனுடைய பூமியை எவன் எடுத்துக்கொள்ளுகிறானே அவன் பூமியை அடைவதேயில்லை யோக்கியர்களுக்குப் பூமியைக்கொடுப்

1 பிரியமாகக்கொடுக்கப்படுவது

2 கொடுப்பதனுல் பாவம்விலகுகிறது, வாங்குவதனுற்பாவமில்லை

3 தானம்செய்வதனுல் அரசனுக்குப்பூமியில்லாமற்போகாதென்பது

4 வாங்கினவனுக்குப் பலனும் அரசனுக்குஆளுகையும் வியவஸ்தையாயிருக்கும் என்பது.

வன் சிறந்த பூமியைப் பெறுகிறான் தாமஸிந்தையுள்ளவன், இருக்
நும்போதும் இறந்தபின்னும் பெரும்புகழை அடைகிறான் ஒருவ
னுக்கு ஆகாரத்தைக்கொடுக்கும் பூமியைக் கொடுப்பதனால் அறுபதி
றயிர வருஷகாலம் மேலுலகத்திலிருப்பான் அவ்வளவு பூமியை
பகரிப்பவனுக்கு அதற்கிரண்டுமடங்கு அதிககாலம் நரகமுண்டு
அரசனே! உபகாரஞ்செய்த எந்த அரசனுடைய பூமியைப் பிராம
ணர்கள் எப்போதும் ஸ்லாகிக்கின்றனரோ அவ்வரசனது பூமியைப்
பகைவர் [1] ஸ்லாகிப்பதில்லை ஜீவனமில்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்
டிருக்கும் மனிதனும் ஏதாவது பாவஞ்செய்தவனாயின், பசுவின்
தோலளவு பூமியைத் தானஞ்செய்த மாத்திரத்தினால் சுத்தனாகிவிடு
வான் வானா தாமஙகள் கெட்டும் கொடிய செய்கை செய்து
கொண்டிருக்கும் அரசர்களுக்கும் பூமிதானம் எல்லாவற்றிலும்
சிறந்த புண்ணியமென்று சொல்லத்தக்கது அசுவமேதயாகம் செய்
வதற்கும் யோக்கியனுக்குப் பூமிதானம் செய்வதற்குமுள்ள வித்தி
யாஸம் சிறிதென்று பூர்விகர்கள் எப்போதும் நினைத்திருக்கின்றனர்
வித்வான்கள் எந்தப் புண்ணியத்தைச்செய்தும் பயந்துகொண்டிருப்ப
துண்டு எல்லாவற்றிலும் சிறந்த இந்தப் பூமிதானம் ஒன்றுமட்டும்
(பாவ) பயமற்றது பூமிதானஞ் செய்யும் சிறந்த புத்திமான் பொன்
வெள்ளி வஸ்திரம் ரத்தினம் முத்துக்கள் தனங்கள் இவற்றையெல்
லாம் கொடுத்தவனாகிறான் தவம் யாகம் வேதாத்யயனம் நல்லொழுக்
கம் ஆசையின்மை சொல்தவறாமை பெரியோர்களையும் தேவர்களையும்
பூஜிப்பது இவையெல்லாம் பூமிதானம் செய்பவனிடத்திலிருக்கும்
தலைவனுடைய நன்மையில் ஊக்கத்துடன் யுத்தத்திலடிபட்டுத்
தேகத்தைவிட்டவரும் பிரமலோகம்போன ஸித்தர்களும் பூமிதானம்
செய்தவனுக்கு மேலாகார் தாயானவள் தன் குழந்தையைப் பால்
கொடுத்து வளர்ப்பதுபோலப் பூமியானது தானஞ்செய்தவனைத்
தன்னது எல்லா ஸாரங்களாலும் எப்போதும் அனுக்கிரகிக்கிறது பூமி
தானஞ்செய்பவனுக்கு யமன் அடிமையாகிறான் மிக்ககொடிய யம
தண்டனையும் நெருப்பின் மிக்க கொடியதாபமும் பயங்கரமான வருண
பாசங்களும் பூமிதானம் செய்பவனை அணுகா மனத்தில் அடக்கத்து
டன் பூமியைத்தானஞ்செய்கிறவன் பித்ருலோகத்திலுள்ள பித்ருக்களை
யும் தேவலோகத்திலுள்ள தேவதைகளையும் திருப்தியடைவிக்கிறான்
ஆகாரமில்லாமல் துயரப்பட்டு இளைத்து இறக்குந் தருணத்திலிரு
ப்பவனுக்கு ஜீவனத்திற்கு ஆதாரமான பூமியைத் தானஞ்செய்யும் ம

[1] பகைவருக்குக் கிடைப்பதில்லை

தன் ஸத்திரயாகம் செய்தவனாகிறான்; சிறந்த பாக்யமுள்ளவனே! பசு அன்புடன் பால்சுரந்துகொண்டு கன்றைத்தேடி ஓடுவதுபோலப் பூமிதானம் செய்தவனைப் பூமி தேடிக்காப்பாற்றுகிறது. ஈ கலப்பையினால் உழப்பட்டதும் விதைவிதைக்கப்பட்டதும் தான்யம் விளைந்ததுமாயுள்ள பூமியையும் ஜலாதாரமுள்ள வீட்டையும் கொடுப்பவன் வேண்டினவற்றைக் கொடுத்தவனாகிறான். நல்லொழுக்கமுள்ளவனும் அக்நிஹோத்திரஞ் செய்பவனும் பரிசுத்தமான தவமுள்ளவனுமான பிராம்மணனுக்குப் பூமிதானம் செய்த மனிதன் யமனுலகம் போவதில்லை. சந்திரனுக்கு நாள்தோறும் வளர்ச்சியுண்டாவதுபோலப் பூமிதானத்தினாலுண்டான பலன் ஒவ்வொரு பயிருக்கும் அதிகப்படுகிறது. இந்த விஷயத்தில் பூர்வ விருத்தாந்தந் தெரிந்தவர்கள் பூமிதேவியினால் சொல்லப்பட்ட சுலோகங்களைச் சொல்லுகின்றனர். இவற்றைக் கேட்டுத்தான் பரசுராமர் காச்யபருக்குப் பூமிதானம் செய்தார். அவற்றின் பொருள், 'என்னையே வாங்குங்கள், என்னையே கொடுங்கள், என்னைக் கொடுத்தபின் என்னையே அடைவீர்கள். இந்தத் தானமானது இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் மேன்மேலும் விருத்தியாகும். வேதத்திற்குச் சமமான இந்தச் சொல்லை எந்தப் பிராம்மணன் ச்ராத்தத்தில் ஹோமம்செய்யும்போது நினைக்கிறானோ அவன் பிரம்மபதத்தை அடைவான். பூமிதானமானது பேய்பிசாசுகளாலும் சாபத்தினாலுமுண்டான கேடுகளுக்குப் பரிகாரமான பெரும்பிராயச்சித்தம். இப்படிப்பட்ட பூதானத்தைச்செய்தவனும் வேதவாக்கியமாகிய இந்தச்சொல்லை அறிகிறவனும் தம்குலத்தில் முன்பத்தின்மரையும் பின்பத்தின்மரையும் பரிசுத்தமாகச்செய்வர். பூமியானது எல்லாப்பிராணிகளுக்கும் காரணமாகவும் அழிவில்லாததாகவும் நினைக்கப்படுகிறது' என்பது. அரசனுக்குப் பட்டாபிஷேகம் செய்தவுடன் இந்த வேதத்தைக் கேட்பிக்க வேண்டும். அவன் இதைக்கேட்டு ஸாதுக்களுக்குப் பூமிதானம் செய்ய வேண்டும். ஸாதுக்களின் பூமியை எடுத்துக்கொள்ளலாகாது. இந்த உபதேசமெல்லாம் பிராம்மணர்களுக்கும் அரசர்களுக்குமே உரியது, ஸந்தேகமில்லை. தர்மங்களில் தோர்ச்சியுள்ள அரசன் செல்வத்திற்கு முதற்காரணம். எவர்களுக்கு அரசன் தர்மந்தெரியாதவனாகவும் நாஸ்திகனாகவுமிருக்கிறானோ அவர்கள் ஸுகமாகத் தூங்குவதும் ஸுகமாகக் கண்விழிப்பதுமில்லை. அவ்வரசனுடைய கெட்ட செய்கைகளினால் மனிதர்கள் எப்போதும் நடுக்கமுற்றவராவார். மேன்மேலும் லாபமும் உள்ளவற்றைக் காப்பதுமாகிய யோகக்ஷேமங்க

ரண்டும அவனுடைய தேசததில மிகுதியாக இரா எவாகளுககு
ரசன தெரிநதவனுகவும தாமததை நடததுகிறவனுகவுமிருக
ருனே அவாகள மிகக சுகமாகபபடுததுச சுகமாக எழுநதிருபபாா
வவாசனுடைய நறசெயகைகளினுல ராஜயததிலுளள ஜனஙகள
ஃகமடைநது நலலமழையினுலும தமதமதொழிலகளினுலும யோக
க்ஷமஙகளின அபிவிருததியைப பெறுவாா பூமிதானம செயபவன
வனே அவனே மேறகுலததோன, அவனே ஆணபிளளை,
வனே பநது, அவனே புணணியஞ செயதவன, அவனே வள
ல, அவனே பராககரமமுளளவன வேதஙகள தெரிநதபிராமமண
வககுச செழிததபூமியைத தானமசெயபவா பூமிககுச சூரியாபோல
ளியினுல பிரகாசிபபாா பூமியில விதைககபபடட பயிாகள முளைப
துபோலப பூமிதானம செயவதனுல மனிதனுடைய விருபபஙகள
யனபடுகினறன ஆதிதயன, வருணன, விஷணு, பிரமமா, சநதிரன,
கனி, சூலததைக கையிலேநதிய சிவபெருமான இவாகளும பூமிதா
மசெயதவனை அனுககிரகிககினறனா மனிதாகள பூமியிறபிறககின
னா, பூமியில முடிவையும பெறுகினறனா இந [1]நானகுவித உலக
மும பூமியின குணஙகளைககொணடே உணடாகினறன பூமிககதி
தியே! உலகததிறகுத தாயும தநதையும பூமியே அரசனே!
ததறகு நிகரானபொருள ஒனறுமிலலை யுதிஷடிா! இநதவிஷயததி
லும பருஹஸபதிககும இநதிரனுககும நடநத சமபாஷணையாகிய
ருபழையஇதிஹாஸததைக கூறுகினறனா இநதிரன, தக்ஷிணைகள
மிகுதியாகவுடைய நூறுமஹாயாகஙகளைச செயதபிறகு, சாஸதிரங
தெரிநதவரில சிறநதவரான பிருகஸபதியை நோககிக கேடகலானுன.

'பகவானே! எநததானததினுல மனிதன ஸவாககததை
யடைநது ஸுகமாக விளஙகுவான? அழிவிலலாததும அபகரிககப
படாததுமான தானம எது? சொலலுகிறவாிறசிறநதவரே! அதைச
சொலலும' எனறு கேடடான தேவருககுபபுரோகிதரும மிகக
வலிமையுளளவருமான பிருகஸபதி தேவேநதிரனுல இவவாறு கேட
கபபடடவுடன, அவனுககு மறுமொழி கூறலானுா 'விருதரனைக
கொனறவனே! பொனனைககொடுபபதும பசுவைககொடுபபதும பூமி
யைககொடுபபதும விததையைககொடுபபதும கனனிகையைககொடுப
பதும பாவததிறகுச சிறநதபரிகாரஙகள சிறநத அறிவுளளவன இவற
றைக கொடுபபதினுல எலலாபபாவஙகளாலும விடபபடுகிறுன தே
வேநதிரனே!பிரபுவே! பூமிதானததைவிடச்சிறநதது மறறொனறிலலை

1 ஆதிபாவம 57-ம பககம குறிபபிறகாணக

யெனறு தெரிநதவரகள சொலலுகிறாரகள நானும அபபடியே நினை
கிறேன. பிராமமணனுககாகவும பசுவுககாகவும தேசபீடைககாக
அரசனுககும குலமகளிரகளுககும அவமானமவராமற செயவதறக
வும உயிரவிடடவர பூமிதானம செயதவருககுசசமமாவர தேவஸ
ஷடனே! யுததததில உறசாகமுளளவரகளாக யுததததிலடிபடடு ஸ
ஸவாககமபோன சூரரகளனைவரும பூமிதானமசெயதவனுககு மேல
மாடடார வேநதனுடைய நனமையில ஊககமவைதது யுததததில
படடுத தேகததைவிடடவரகளும பிரமமலோகததிலிருககும யோ
களும பூமிதானமசெயதவனுககு மேலாவதிலலை பூமிதானம செ
யுமமனிதன பூமியில மடிநதிருககும தனமுன கடடஸதாகள ஐவரு
அவருககுமுன அறுவருமாகப பதினொருவரைக காபபாறறுகிறவனா
ருன இநதிரனே! ரததினஙகளநிரமபின பூமியை எவனகொடுககி
னறோ அவன எலலாபபாவஙகளாலும விடுபடடு ஸவாககலோகததி
கொணடாடபபடுவான அரசனே! வேணடபபடுமசிறபபுககளெலலா
நிரமபின செழிததபூமியைக கொடுபபவன அரசாககுமரசனாவா
அதுதான எலலாவறறிலும சிறநததானம வாஸவனே! வேணடி
வையெலலாம நிரமபின பூமியைககொடுககிறவனை அதிலுளளஎலலா
பிராணிகளும தம தமமைக கொடுபபதாக நினைககினறன ஸஹ
ராக்ஷனே! நினைததவறறையெலலாம கறபபதுமவிருமபததககுண
ஙகளெலலாமுளளதுமான பசுவைத தானம செயயுமமனிதன ஸவா
கததைச சேருவான தேவருககதிபதியே! தேனாறுகளும நெயயா
களும பாலாறுகளும தயிராறுகளும பூமிதானமசெயபவனைத தே
லோகததில திருபதி அடைவிககினறன அரசன பூமிதானமசெயவ
னால எலலாபபாவஙகளிலிருநதும விடுபடுவான மறறததானஙக
பூமிதானமபோற சிறபபுளளவையலல கடலசூழநதபுவனியைத த
ஆயுததததினால ஜயிததுககொடுபபவனை ஜனஙகள பூமியுளளவரை
லும புகழவார புரநதரனே! செலவமுமசுவையுமநிரமபின புணணி
மான பூமியைககொடுபபவனுககுப பூமிதானததின சிறபபினாலகிடை
தத புணணியலோகஙகள அழிவதிலலை சககரனே! இவவுலகில எ
போதும அழியாத ஐசுவரியததையும சௌககியததையும விருமபு
அரசன யோககியனுககுச சாஸதிரபபடி பூமிதானததைச செய
வேணடும பாவமசெயத மனிதனும பிராமமணனுககுப பூமிதான
செயதபிறகு அநதபபாவததை, பாமபு பழையசடடையை விடுவது
போல விடடுவிடுகிறான சககரனே! பூமியைககொடுககும மனிதன
கடலகள நதிகள மலைகள காடுகள இவறறையெலலாம கொடுததவ

கிறான் பூமியைக் கொடுப்பவன் தடாகங்களையும் கிணறுகளையும் ...கிகளையும் ஏரிகளையும் அன்னத்தையும் எல்லாச்சுவைகளையும் கொடுத்த ...னாகிறான் பூமியைக்கொடுப்பவன் சக்தியுள்ள ஓஷதிகளையும் பூக் ...றும் பழங்களுமுள்ள மரங்களையும் காடுகளையும் கற்களையும் மலை ...யும் கொடுத்தவனாகிறான் நிரம்பின தக்ஷிணைகளோடு அக்நிஷ ...ாம முதலிய யாகங்களைச்செய்தவனும் பூமிதானத்தினாலடையும் ...லனை அடைவதில்லை பூமிதானம்செய்பவன் தன்குலத்தில் பதின் ...ரைக் காப்பாற்றுகிறான், பூமியை அபகரிப்பவன் பதின்மரைக் ...கொல்லுகிறான் தன் முன்னோரால் கொடுக்கப்பட்ட பூமியை அப ...ிப்பவன் நரகத்திற்குப்போவான் வாக்குத்தத்தம்செய்து கொடா ...னும் கொடுத்ததைத் திரும்பி எடுத்துக்கொள்ளுகிறவனும் யமன் ...ட்டளையினால் வருணபாசங்களால் கட்டப்பட்டுத் தவிப்பார் எப் ...ாதும் அக்நிஹோத்ரத்தையும் மஹாயாகங்களையும் செய்பவனும் ...திதிகளிடத்தில் அன்புள்ளவனும் கையில்பொருளில்லாதவனு ...கிய பிராம்மணஸ்ரேஷ்டனைக் காப்பாற்றுகிறவர்கள் யமனை அணு ...ார் புரந்தரனே! அரசன் பிராம்மணர்களிடத்தில் கடன் தீர்ந்தவ ...க இருக்கவேண்டும், மற்ற வர்ணங்களிலும் எளியவர்களையும் பலங் ...குறைந்தவர்களையும் காப்பாற்றவேண்டும் தேவருக்கதிபதியே! ...தவர்களிற் சிறந்தவனே! கஷ்டஜீவியான பிராம்மணனுக்குப் பிற ...ால் கொடுக்கப்பட்ட பூமியை ஒருகாலும் அபகரிக்கலாகாது ஏழை ...யான பிராம்மணர்களின் பூமியை அபகரித்ததால் அவர்கள் துயரப் ...டுவதால் விழும் கண்ணீர் குலத்தின் மூன்று தலைமுறைகளை ...ழித்துவிடும் ஸஹஸ்ராக்ஷனே! ராஜ்யந்தவறின அரசனைத் திரும் ...பவும் நிலைநிறுத்துகிறவனுக்கு ஸ்வர்க்கத்தில் கொண்டாடப்படும் ...தானம் உண்டாகிறது க்ரமமாக விற்கப்பட்டு வாங்கினவனால் ...னருக்குச் செவ்வைப்படுத்தி அனுபவிக்கப்பட்ட பூமியை [1]அரசன் ...அவனுக்கு நிலைக்கச் செய்யவேண்டும் கரும்பு, யவம், கோதுமை ...விருத்தியாயிருப்பதும் பசுக்களும் குதிரைகளும் நிரம்பினதுமான ...பூமியைக்கொடுப்பவன் எல்லாப் பாவங்களினின்றும் விடுபட்டு ...ஸ்வர்க்கலோகத்தில் கொண்டாடப்படுவான் உள்ளே புதையலுள்ள ...தும் உயர்ந்தபொருள்களெல்லாமுள்ளதுமான பூமியைக் கொடுப்ப ...வன் அழிவில்லாத லோகங்களை அடைவான். அவனுக்கு அது பூமி ...ஸத்திரமென்னப்படுகிறது பூமியைக்கொடுப்பவன் எல்லாப் பாவங் ...களையும் உதறி ராஜஸகுணமற்றவனாகி ஸாதுக்களால் அங்கீகரிக்கப்

1 'நருப:' என்று பாடம் கொள்ளப்பட்டது

பட்டு உலகத்தில் ஜனங்களால் கொண்டாடப்படுகிறான் சக்
னே! ஜலத்திலவிழுந்த எண்ணெய்த்துளி எப்படிப்பரவுகிறதோ அ
படியே பூமிதானத்தின் பலன் பயிருக்குப்பயிர் அபிவிருத்தியாகிற
இந்திரனே! யுத்தத்தில் பிரகாசிக்கும் சூரர்களாகிய எந்த அரசர்க
போர்த்தலையில் முன்னேக்கிச்சென்று வதம்செய்யப்படுகின்றனரோ
அவர்கள் பிரம்மலோகமடைவார்கள் தேவேந்திரனே! அப்படியே
பூமிதானம்செய்பவனையும் தேவலோகத்தில் தேவலோகத்துப் பூமா
அணிந்த பெண்கள் ஆடியும் பாடியும் உபசரிக்கின்றனர் இவ்வுலக
தில் பிராம்மணனுக்குச் சாஸ்திரப்பிரகாரம் செம்மையாகப் பூ
தானம் செய்பவன் தேவலோகத்தில் தேவர்களாலும் கந்தர்வர்க
லும் பூஜிக்கப்பெற்று ஸுகமடைந்து மகிழ்ந்திருப்பான் தேவே
திரனே! பூமிதானம்செய்பவனைப் பிரம்மலோகத்திலும் சிறந்த புஷ
மாலைகளை அணிந்த நூறு அப்ஸரஸுகள் உபசரிப்பர் பூமிதான
செய்யும் மனிதனிடத்தில் எப்போதும் புண்ணியங்கள் சேரும். ஜ
சங்கம், ஸிம்மாஸனம், ஒற்றைக்குடை, சிறந்த குதிரைகள், சிறந்
தேர்கள், புஷ்பங்கள், பொன்குவியல்கள் இவை பூமிதானத்தி
லுண்டாகின்றன புரந்தரனே! தடைப்படாத கட்டளையும், 'ஜய
என்னும் சப்தங்களும், பொருள்களும், ஸ்வர்க்கமும், பொன்மல
பூக்கும் கொடிகளும் பொன்மயமான் தாபனைகளும் புறங்களும் நிர
பின இடங்களும், பூமிதான புண்ணியத்தின் பயன்கள் பூமியை
கொடுக்கும் மனிதன் [1] அமிருதத்தையுண்டாக்கும் பூமியை அடை
வான் பூமிதானத்திற்கொப்பான தானமில்லை தாய்க்கு ஒப்பா
குருவில்லை ஸத்தியத்தைப்போன்ற தர்மமில்லை தானத்திற்கு நி
ரான புதையலில்லை' என்றார் பிருகஸ்பதியினிடம் இதைக்கேட்ட
டன், இந்திரன் தனங்களும் ரத்தினங்களும் நிரம்பின இந்த
பூமியை அவருக்கு அளித்தான் இந்தப் பூமிதானத்தின் சிறப்பை
ஶ்ராத்தகாலத்தில் பிராம்மணர்களைக் கேட்பித்தால் அந்த ஶ்ராத்த
தில் ராக்ஷஸர்களுக்கும் அஸுரர்களுக்கும் பங்கில்லை, பிதருக்களு
குக்கொடுத்த ஶ்ராத்தம் அழியாமலிருக்கும், ஸந்தேகமில்லை ஆத
லால், வித்வானானவன் ஶ்ராத்தங்களில் புசிக்கும் பிராம்மண
களுக்கு இதைக் கேட்பித்தல்வேண்டும் குற்றமற்றவனே! பர
ஶ்ரேஷ்டனே! இப்படி எல்லாத் தானங்களிலும் சிறந்த தானத்தை
உனக்கு நான் உரைத்தேன் இன்னும் என்ன கேட்கவிரும்புகிறாய்?'
என்றார்.

---

[1] சுகத்தைத்தரும்

## தொண்ணூற்றெட்டாவது அத்யாயம்

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி)

(நாரதர் அன்னதானத்தின் சிறப்பைப் பீஷ்மருக்கு உரைத்தது)

யுதிஷ்டிரர், "பரதஸ்ரேஷ்டரே! இவ்வுலகத்தில் தானம்செய்யக்கருதின அரசன் குணங்களிற்சிறந்த பிராம்மணர்களுக்குக் கொடுக்கத்தக்க தானங்கள் எவை? அந்தப் பிராம்மணர்கள் எதனால் உடனே திருப்தியடைவார்கள்? அவர்கள் திருப்தியடைந்தால் எதைக்கொடுப்பார்கள்? சிறந்தகைகளையுடையவரே! புண்ணியத்தினாலுண்டான பெரும்பயனைப்பற்றி எனக்குச் சொல்லக்கடவீர் வேந்தரே! இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும்பயன்படுவது எந்தத்தானம்? இதை உம்மிடத்தில் கேட்க விரும்புகிறேன் எனக்கு விரிவாகச் சொல்லவேண்டும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்

"திவ்யஞானமுள்ள நாரதரிடம் இதே விஷயத்தைப்பற்றி முன்னே நான்கேட்டபோது அவர் எனக்குச்சொன்ன மறுமொழியை நான் உனக்குச் சொல்லுகிறேன், கேள் நாரதர், 'தேவர்களும் ரிஷிகளும் அன்னதானத்தையே சிலாகிக்கின்றனர். உலகவாழ்க்கையும் யாகங்களுமாகிய எல்லாம் அன்னத்தைப் பொறுத்தவை அன்னதானத்திற்கு ஒப்பானதானம் முன்னுமில்லை, பின்னுமில்லை அதனாலே தான் மனிதர்கள் அன்னதானம்செய்வதை முக்கியமாகக்கருதுகிறார்கள் உலகத்தில் பலத்தைக்கொடுப்பது அன்னம் அன்னத்திலே தான் உயிர் இருக்கிறது பிரபுவே! இவ்வுலகமனைத்தும் அன்னத்தினால் தாங்கப்படுகிறது இவ்வுலகத்தில் கிருகஸ்தர்களும் பிரம்மசாரிகளும் ஸந்யாஸிகளும் வானப்பிரஸ்தர்களும் அன்னத்தினால் தான் இருக்கின்றனர் அன்னத்தினால் உயிருண்டாகிறதென்பது பிரத்யக்ஷம், அதில் ஸந்தேகமில்லை தன்னுடைய அபிவிருத்தியைக்கருதுகிறவன் பெருங்குடும்பத்தோடு கஷ்டப்படும் மகாத்மாவான பிராம்மணனுக்கும் பிரம்மசாரிக்கும் ஸந்யாஸிக்கும் அன்னம் கொடுக்கவேண்டும் அன்னத்தை வேண்டும் வித்வானான பிராம்மணனுக்கு, அன்னம்போடுகிறவன் தனது மறுமைக்கு உபயோகமான சிறந்த, புதையலைப் புதைத்துவைக்கிறான் செல்வப்பெருக்கைவிரும்பும் கிருகஸ்தன், வழிநடையினாலிளைத்துத் தன்வீட்டிற்குவந்த பிராம்முதிர்ந்தயோகியைப் பூஜிக்கவேண்டும். அரசனே! மேல் நோக்கியிருக்கும் கோபத்தையும் த்வேஷத்தையும் விட்டு யாவருக்கும்

ஸ்ஸலபனுயிருந்து அன்னம் போடுகிறவன் தேவலோகத்திலும் இவ்வுலகத்திலுமுள்ள இன்பங்களைப் பெறுவான் வந்தவனை ஒரு போதும் அவமதிக்கவும் நிராகரிக்கவும் கூடாது அன்னதானமானது சண்டாளனுக்கும் நாய்க்கும் கொடுக்கப்பட்டாலும்கெடாது வழி நடந்துவருந்தியிருக்கும் முன் காணாத மனிதனுக்கு நோவாமல் அன்னம் போடுகிறவன் பெரிய தாமப்பயனை அடைவான் அரசனே! எந்தமனிதன் பிதருக்களையும் தேவர்களையும் ரிஷிகளையும் பிராமணர்களையும் விருந்துகளையும் அன்னத்தினால் திருப்தி அடைவிக்கிறானோ அவனுடைய புண்ணியத்தின் பயன் பெரிது மிக்கபாவமான கருமத்தைச் செய்தும் பசித்தவனுக்கும், அதிலும் முக்கியமாகப் பிராமணனுக்கும் அன்னங்கொடுப்பவன் பாவத்தினால் அறிவுகெட்டிரான் பிராமணர்களுக்குச் செய்யும் அன்னதானம் அழியாது, சூத்திரர்களுக்குச் செய்தது பெரும்பயனைத் தரும் அன்னதானம் சூத்திரனுக்குச் செய்யப்பட்டாலும் பிராமணர்களுக்குச் செய்யப்பட்டாலும் விசேஷந்தான் பிராமணன் அன்னங் கேட்கும்போது அவனுடைய கோத்திரத்தையும் ஆசாரத்தையும் தேசத்தையும் ஊரையும் கேட்கலாகாது விசாரியாமல் அன்னத்தைக் கொடுக்கவே வேண்டும் ராஜனே! அன்னம்போடுகிறவனுக்கு விருக்ஷங்கள் இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் அன்னத்தையும் வேண்டும் பலன்களெல்லாவற்றையும் கொடுக்குமென்பதில் ஸந்தேகமில்லை பிதருக்கள், 'நமதுபிள்ளையாவது பேரனுவது அன்னதானம் செய்வானோ?' என்று உழவர்கள் நல்லமழையை எதிர்பார்ப்பதுபோல எதிர்பார்க்கின்றனர் பிராமணனென்பவன் பெரியபொருள் அவன் 'தேஹி' என்று தானே கேட்கும்போது விருப்பத்தோடாயினும் வெறுப்போடாயினும் கொடுப்பவன், புண்ணியத்தை அடைவான் எல்லாப் பிராணிகளுக்கும் பிராமணன் முதலில் திருப்தியாகப் புசிக்கத்தக்க அதிதியாகிறான் யாசிக்கின்ற பிராமணர்கள் எப்போதும் எந்த வீட்டிற்குச் சென்று மரியாதைபெற்றுத் திரும்பிப்போகின்றனரோ அந்தவீடு மிகப் பெருகுகின்றது பாரதனே! இவ்வுலகத்தில் மனிதன் அன்னம்போடுவதனால் இறந்தபின் சிறந்தபாக்கியம்பெற்ற குலத்தில் பிறப்பதையும் மேலானஸ்திதியையும் அடைவான் நன்றாகத் தேவாராதனம் செய்து சிறந்த அன்னத்தைப்போடுகிறவன் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்பட்டு வஸிப்பான் அன்னந்தான் மனிதர்களுக்கு உயிர் எல்லாம் அன்னத்தைப்பற்றியிருக்கின்றன ராஜனே! அன்னங் கொடுப்பவன் பசுக்களும் புத்திரர்களும் தனங்களும் போகங்களும் பல

ும அழகு முளளவனுகிறுன அன்னஙகொடுபபவன உயிா கொடுப வனெனறும எலலாஙகொடுபபவனெனறும உலகததில சொலலப படுகிறுன விருநதாகவநத பிராமமணனுககு கிரமபபடி அன்னம போடுவதனுல அனனதானம செயபவனுககு ஸுகமுணடாகிறது அவன தேவாகளாலும பூஜிககபபடுகிறுன பிராமமணன பெரிய தெய ம அவன நலலநிலமபோனறவன அவனிடததிலவிதைககபபடும நதபபுணணியவிதையுககும பலனபெரிது பூஜிபபவனுககும கொடுப வனுககும திருபதியுணடாவது பிரதயகூமாயிருககிறது மற லலாத்தானஙகளினபலனகளும கணணுககுததெரியாதவை பார னே! ஸநததியுணடாவதும அனனததினுலேதான இனபமும அன ததினுலேதான அறமபொருளிரணடும அனனததினுலேயே பிணி ரவதும அனனததினுலேயெனறறி முனகலபததில பிரமமதேவர னனததை அமிாதமெனறு சொனனா பூலோகமும தேவலோகமும காயமும அனனநதான எலலாம அனனததிலிருககினறன அன ம ஒழிநதால தேகததிலுளள ஐநது பூதஙகளும பிரிநதுபோகின ன மிகக பலசாலியின பலமும அனனமிலலாமையால கெடுகிறது, ராஜனே! அபபடியே அனனமிலலாமையால உறவினாகள ஒருவரை யொருவா கொணடாடுவதும விவாகமும யாகமும இலலாமறபோகின ன வேதமும அபபோது நஷடமாகிவிடுகிறது மூனறுலோகங ளிலுமுளள ஜஙகமமும ஸதாவரமுமாகிய அனைததும அனனததினு ருககினறன ஆதலால, அறிஞாகள தாமததிறகாக அனனதானம செயயவேணடும ராஜனே! அனனதானமசெயயும மனிதனுககுப லமும உறசாகமும ஜயமும மூனறுஉலகஙகளிலுமபுகழும எப போதும அபிவிருததியாகினறன

பாரதனே! உயிருககெலலாம அதிகாரியானகாறறு மேலே மேகஙகளிறசேருகிறது அநத மேகஙகளிலுளள ஜலததை இநதிரன ாஷிககிறுன சூரியன தனகிரணஙகளினுல பூமியிலுளள ஜலததை இழுககிறுன. அநதஜலததைச சூரியனிடததிலிருநது வாயுபகவான மழையாகபபொழிகிறுன பாரதனே! அநத நீா மேகததினிடமிருந்து எபபோது பூமியிலவிழுகிறதோ அபபோது பூமிதேவி கொழுபபு ளளவளாகிறுள அதனபிறகு, பயிாகள வளாகினறன அதனுல உல கம ஜீவிககிறது அதனபிறகு, மாமஸம கொழுபபு எலுமபு பிநது இவை கள உணடாகினறன ராஜனே! அநதபபிநதுவிலிருநது பிராணிகளுண டாகினறன அகனியும சநதிரனுநதாம அநதபபிநதுவை உணடாககு வதும போஷிபபதும இபபடிச சூரியனும வாயுவும பிநதுவும அன்

னத்தைச்சோந்த ஒரு கூட்டமாக நினைக்கப்படுகின்றனா இவாகளி
லேயே பிராணிகள உண்டாகின்றன பரதஸ்ரேஷ்டனே! தனவீட்டி
குவந்து யாசிப்பவனுக்கு அன்னதானஞ்செய்பவன பிராணிகளுக
உயிரையும சக்தியையும கொடுப்பவனாகிறுன' என்றூா
ராஜனே! அன்னதானத்தைப்பற்றி நாரதா இவவாறு சொல
நானகேட்டேன ஆதலால, நீயும கோபத்தையும மனஸதாபத்தைய
விட்டு அன்னத்தை எப்போதும கொடு ராஜனே! பிரபுவே! நீயு
தக்கபிராமமணாகளுக்குச் சாஸதிரப்பிரகாரம ஸரியான அன்னத்தை
போட்டால ஸவாக்கத்தை அடைவாய ராஜனே! அன்னம போடுகி
வாகளுக்குள்ள உலகஙகளைச சொலலுகிறேன, கேள அமமஹா
மாக்களுக்கு ஸவாக்கத்தில பலவகைவடிவஙகளாகக கட்டப்பட்டவை
யும், அனேகந தூணகளுளளவையும, சந்திரமண்டலமபோ
வெணமையானவையும, இளஞ்ஸூரியனபோனற நிறமுளளவையு
சலஙகைகளின மாலைகளகட்டப்பட்டவையும, அனேகஙாருமா
களுளளவையும, மீனமுதலிய ஜலஜநதுக்களுளள தடாகஙகளை நடு
வுடையவையும, ஸூரியனபோனற வைடூரியககறகளினுலும வெள
யினுலும பொனனினுலும செய்யப்பட்டவையும, நிறபவையும, நட
பவையுமான வீடுகள பிரகாசிக்கினறன வேணடினபலனகளெலல
வறறையும கொடுக்கும விருக்ஷஙகளும, வாவிகளும, வீதிகளும
ஸபைகளும, கிணறுகளும, குளஙகளும, அழகானசப்தமுளளவையு
குதிரைகள பூட்டப்பட்டவையுமான ஆயிரக்கணக்கானதோகளும
குனறுகளாக்குவிநதிருக்குமபக்ஷணஙகளும, போஜனஙகளும, ஆடை
களும, ஆபரணஙகளும அநதக்கிருகஙகளிலிருக்கினறன பால ஆ
கள ஓடுகினறன அன்னபாவதஙகள இருக்கினறன மாளிகைகள
வெணமேகஙகளபோலிருக்கினறன படுக்கைகள பொனனிறை பிரகா
சிக்கினறன அவையெலலாம அன்னதானம செய்பவருக்குக்கிடை
கினறன ஆதலால, நீயும அன்னதானம செய்துகொணடிரு அன்ன
தானமாகிய புணணியத்தைச்செய்தமாஹாதமாக்களுக்கு இப்படி
பட்ட உலகஙகள் இருக்கினறன ஆதலால, பூமியில மானிடாகள
முயறசியோடு அன்னதானம செய்யவேணடும" என்றூா

தொண்ணூற்றொன்பதாவது அத்யாயம்

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி)

(நக்ஷத்ரங்களில் தானஞ்செய்யும்முறையும் பலனும்)

யுதிஷ்டிரர், "அன்னதானம் செய்யவேண்டுமென்பதைப்பற்றி ர் சொன்னதைக் கேட்டேன். இப்போது நக்ஷத்திரங்கள் சேருங் ாலங்களில் (செய்யும்) தானங்களின் விதியைப்பற்றி எனக்குச்சொல் க்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்:

இந்தவிஷயத்திலும் தேவகிக்கும் நாரதமகரிஷிக்கும் நடந்த ஸம் ாஷணமாகிய இந்தப்புராதனமான இதிஹாசத்தைக் கூறுகின்றனர். ாமமறிந்தவளாகியதேவகி, திவ்யஞானமுள்ள நாரதர் துவாரகைக்கு ந்தபோது, நீ கேட்டகேள்வியையே கேட்டாள். ராஜனே! அவள் கேட்டதற்குத் தேவரிஷியான நாரதர் எல்லாவற்றையும் சாஸ்திரப் ிரகாரம் சொன்னதைச் சொல்லுகிறேன், கேள். நாரதர், 'சிறந்த ாக்கியமுள்ளவளே! [1] கிருத்திகாநக்ஷத்திரத்தில் நெய்யுடன்சேர்ந்த ாயஸான்னத்தினால் ஸாதுக்களான பிராம்மணர்களுக்கு ஸந்தர்ப்ப ணம்செய்பவன் எல்லாவற்றிலும் மேலான உலகங்களை அடைவான். ரோஹிணீ நக்ஷத்திரத்தில் மிகுதியான மான்மாம்ஸங்களோடும் நெய் ன்னத்தோடும் பாலன்னத்தையும் குடிக்கப்பாலையும் தனக்கடன்தீர்த் துக்கொள்வதற்காகப்ராம்மணனுக்குக் கொடுக்கவேண்டும். மிருக ீரிஷ நக்ஷத்திரத்தில் கன்றுடன் கூடிக் கறக்கிறபசுவைக்கொடுக்கிற ர்கள் மனித உலகத்திலிருந்து எல்லாவற்றிலும் சிறந்தஸ்வர்க்க லோகத்தை அடைவார். திருவாதிரை நக்ஷத்திரத்தில் உபவாஸ ிருந்து எள்ளுடன்சேர்ந்த கிருஸரமென்னும் அன்னத்தைக்கொடுக் தமனிதன் நரகங்களையும் கஷ்டமுள்ளமலைகளையும் தாண்டு ான். சிறந்ததாகிய புனர்வஸுநக்ஷத்திரத்தில் பக்ஷ்யங்களையும் அன் ங்களையும் கொடுப்பவன் புகழ்பெற்றவனும் அழகுள்ளவனும் மிகுதி ான அன்னமுள்ளவனுமாகி நல்லகுலத்திற்பிறப்பான். புஷ்யநக்ஷத் ிரத்தில் நாணயமாகவாவது கட்டியாகவாவதிருக்கும் பொன்னைக் கொடுப்பவன் ஒளியில்லாத உலகங்களில் சந்திரன்போலப் பிரகாசிப் ான். ஆயில்ய நக்ஷத்ரத்தில் வெள்ளியையாவது விருஷபத்தையா து கொடுப்பவன் ஸர்ப்பபயத்தைவிட்டுத் தன்ஸந்ததிகளுக்குத் தலை

1 பாரதகாலத்தில், கிருத்திகை முதல்நக்ஷத்திரமாக இருந்ததென் து விளங்குகின்றது.

வனுயிருப்பான் மகாநக்ஷத்திரத்தில் எள்ளுநிரம்பின மட்கலங்களைக் கொடுக்கும் மனிதன் இவ்வுலகத்தில் புத்திரர்களையும் பசுக்களையும் நிரம்பப்பெற்று மறுமையிலும் சுகப்படுவான் பூர்வநக்ஷத்திரத்தில் சோர்ந்தகாலத்தில் உபவாஸமிருந்து கறக்கண்டுசேர்ந்த பக்ஷணங்களைப் பிராம்மணர்களுக்குக்கொடுப்பவன் அழகை அடைவான் உத்தரநக்ஷத்திரத்தில் நெய்பாலுடன்கூடின் குறுவையன்னத்தைச் சாஸ்திரப்படி தானஞ்செய்பவன் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுவான் உத்தரநக்ஷத்திரத்தில் மனிதர்கள் என்ன என்ன தானங்கள் செய்தாலும் அவையெல்லாம் பெரும்பயனுள்ளவையும் அழியாதவையுமாகுமென்பது திண்ணம் ஹஸ்தநக்ஷத்திரத்தில் உபவாஸமிருந்து நாலு யானைகள் பூட்டின ரதத்தைத் தானஞ்செய்பவன் புண்ணியபலன்கள் நிரம்பிய உயர்ந்தலோகங்களை அடைவான் சித்திரைநக்ஷத்திரத்தில் விருஷபத்தையும் நல்லவாஸனைத்திரவியங்களையும் [1] அன்புடன் தானஞ்செய்கிறவர் அப்ஸரஸுகளின் லோகத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு நந்தவனத்தில் விளையாடுவார் ஸ்வாதீநக்ஷத்திரத்தில் தனக்கு மிக்கப்பிரியமான தனத்தைக் கொடுப்பவன் சிறந்த உலகங்களையும் இவ்வுலகத்தில் பெரும்புகழையும் அடைவான் விசாகநக்ஷத்திரத்தில் விருஷபத்தையும் பால்கொடுக்கும்பசுவையும் தானயமும் வஸ்திரமும் நிரம்பியதும் தடியோடுகூடின வண்டியையும் கொடுப்பவன், பிதருக்களையும் தேவர்களையும் ஸந்தோஷிக்கச்செய்வதுடன் மறுமையில் அளவற்ற ஸுகத்தை அநுபவிப்பான், நரகங்களை அடையான், ஸ்வர்க்க லோகத்தைஅடைவான் சொன்னபடி பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்பவன் தானவிரும்பும்ஜீவனத்தை அடைவான் நரகமுதலான கஷ்டங்களை அடையானென்பதும் திண்ணம் அநுஷநக்ஷத்திரத்தில் உபவாஸமிருந்து உத்தரியத்தையும் சிறந்த அன்னத்தையும் கொடுக்கும் மனிதன் அநேகயுகங்கள்வரையிலும் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்பெறுவான் கேட்டைநக்ஷத்திரத்தில் [2] காலசாகத்தையும் [3] மூலமென்னுமகிழங்கையும் பிராம்மணர்களுக்குக்கொடுப்பதனால் மனிதன் வேண்டினசெல்வத்தையும் விரும்பின புண்ணிய லோகத்தையும் அடைவான் மூலநக்ஷத்திரத்தில் நியமத்துடன் பிராம்மணர்களுக்கு [4] மூலபலமென்னும் கனியைக்கொடுப்பவன் பிதருக்களைச்சந்தோஷப்படுத்தி விரும்பினலோகத்தையும் அடைவான் பூராடநக்ஷத்திரத்தில்

---

1 'பாரத' என்பது, 'பாவத' என்றிருத்தல்வேண்டுமெ தேவகிக்குச் சொல்லுமிடத்தில், 'பாரத' என்பது பொருந்தாது

2 கருவேப்பிலை 3 முள்ளங்கி 4 பலாப்பழம்

ல உபவாஸமிருநது குலமும ஒழுககமுமுளளவனும வேததத்
ைரகணடவனுமாகிய, பிராமமணனுககுத தயிாப பாததிரஙகளைக
ாடுபபவன மறுஜனமததில கோககளும தனஙகளும மிகுதியாக
ர்மபினகுலததில பிறபபான உததராடநக்ஷததிரததில நெயயும
நனும கறகணடும மிகுதியாகசசோதது ஜலததிறபாசமபணணின
ர்வைககொடுபபவன விருமபினவறறையெலலாம அடைவான உத
ா்டததில அபிஜிததெனனுமமததியானனவேளையில அனுஷடானத
காடிருநது ஞானவானகளுககுத தேனநெயயுடன சோறதபாலைக
க்டுபபவன ஸவாககலோகததில பூஜிககபபடுவான ஶரவணநக்ஷத
ரததில கமபளததையும போாவைவஸதிரததையும கொடுபபவன
வளளைவிமானமேறித தடையிலலாமல ஸவாககலோகததிறகுச
சலவான அவிடடநக்ஷததிரததில நியமததுடன மாடுகளகடடின
ணடியைககொடுபபவன உடனே சிறநதவஸதிரஙகளையும தனததை
ம் மறுஜனமததில ராஜயததையும அடைவான சதயநக்ஷததிரத
ல அகிலசநதனமுதலிய வாஸனைததிரவியஙகளைககொடுபபவன பர
லாக்த்தில அபஸரஸுகளின கூடடஙகளையும எனறுமழியாத
ர்ஸன்களையும அடைவான பூரடடாதிநக்ஷததிரம சோநதகாலத
ல மொசசைககொடடையைததானமசெயபவன எலலாபபக்ஷணங
ளையும பழஙகளையுமடைநது மறுமையிலும ஸுகமுளளவனுவான
ததரடடாதிநக்ஷததிரமசோநததினததில செமமறியாடடுமாமிசத
தககொடுபபவன பிதருககளுககுததிருபதியைச செயது மறுமையி
ம் அளவறறஸுகம பெறுவான ரேவதிநக்ஷததிரததில கறககிற
்கு வெணகலபபாததிரததுடன பசுமாடடை எவன தானமசெய
ருனோ அவனுககு அநதபபசுமாடு மறுமையில வேணடினவறறை
யெல்லாம் எடுததுககொணடு வருகிறது அஶவினிநக்ஷததிரததில
குதிரைகளகடடினரததததைக கொடுககும புருஷஶரேஷடன பராக
ரம்சாலியாகி யானைகளும குதிரைகளும தோகளுமநிரமபபபெறற
லததில பிறககிறுன பரணியில பிராமமணாகளுககு எளபசுவைத
ானஞசெயயுமமனிதன மறுஜனமததில மிகஅதிகமானபசுககளை
ம புகழையும அடைகிறுன' எனபது இவவாறு நக்ஷததிரஙகள
சாநதகாலததில தானததினமுறை ஒருவாறு நாரதரால தேவகிககு
லைககபபடடது அநததேவகி இதைத தனமருமககளுககுச
சான்னள' -'

---

## நூறுவது அதயாயம

## தானதாமபாவம. (தொடர்ச்சி)

(ஜலம, பொன், நெய் முதலியவற்றின் தானத்தைப்பற்றியது)

'பொனனைக கொடுபபவாகள வேணடினவறறை யெலலா
கொடுபபவாகள' எனறு பிரமமாவினபுதரரான அதரிபகவான சொ
ஞா 'பொனனனது பாவததைப போககுகிறது, சுததமானது, ஆ
ளைககொடுபபது, பிதருககளுககு அழியாததிருபதியைககொடுபப
எனறு ஹரிசசநதிரமஹாராஜனால சொலலபபடடது 'தணணீ
கொடுபபது தானஙகளிறசிறநததானம' எனறு மனு சொனனு
ஆதலால, கிணறுகளையும வாவிகளையும குளஙகளையும வெடடுவிக்
வேணடும இவவுலகததில குடிககததககஜலமுளளதும எபபோ
தும வறறாததுமாகிய கிணறு மனிதனுடையசெயகையினாலுணடா
பாவஙகளெலலாவறறையும அழிததுவிடும எவனாலவெடடபபட
குளததில பசுககளும பிராமமணாகளும ஸதபுருஷாகளும எபபோ
தும தணணீாகுடிககினறனரோ அவன தனகுலததையெலலாம க
யேறறுகிறுன எவனுடையஜலம கோடைககாலததிலும வறறு
யிருககிறதோ அவன கொடிய துனபமொனறையும ஒருகாலத
அடைவதிலலை நெயயினால பிருஹஸபதிபகவானுககும பூஷா பக
எனனும சூரியமூாததிகளுககும அசுவினிதேவாகளுககும அக
கும ஸநதோஷமுணடாகிறது நெயயானது சிறநதஒளஷதம, யாக
களுககு மிகமுககியமானது, சுவைகளிறசிறநதது கனிகளி
இது சிறநதது ஆதலால, பலனையும புகழையும ஆரோககியததைப
விருமபுமமனிதன பரிசுததமாகவும உணமையாகவும பிராமம
களுககு எபபோதும நெயயைத தானமசெயயவேணடும எவன ஐ
பசிமாததில பிராமமணாகளுககு நெயகொடுககிறுனே அவனுக
அசுவினிதேவாகள அனபுகூாநது அழகைககொடுககினறனா நெ
யுடனசோநதபாயஸானனததைப பிராமமணாகளுககு எவனகொடு
கிறுனே அவனுடையவீடடை ராகஷஸாகள ஒருகாலும பீடிககமா
டாாகள கரகஙகளெனனும ஜலபாததிரஙகளைககொடுபபவன தாக
தினலிறவான, விருமபினவை நிரமபினவனுவான, விசனபபடான்
பிராமமணாகளமுனனிலையில எபபோதும மிகுநதபயபகதியுட
வணககமாயிருககும புருஷன தானபலனில ஆறிலொருபாகதத
அடைவான் அரசாககரசே! எநதமனிதன ஒழுககமுளள பிராம

ணர்களுக்குச் சமைப்பதற்காகவும் குளிர்காய்வதற்காகவும் விறகு
ளை எப்போதும் கொடுக்கிறானோ அவனது எண்ணங்களும் எல்லாக
ரியங்களும் கூடிவரும் அவன் பகைவர்களைத் தாழ்த்தித் தான்
மேம்பாட்டையடைவான், தேகத்தில் நல்லொளியுள்ளவனுவான் அக்நிபக
ானும் அவனிடத்தில் எப்போதும் அன்புள்ளவனுவான் பசுக்கள்
வனைவிட்டுப்போகா அவன் போரிலும் வெற்றிபெறுவான். குடை
யைக்கொடுப்பவன் புத்ராக்களையும் செல்வத்தையும் அடைவான் கண்
ணோய் அவனுக்கு வராது அவன் யாகபலனையும் அடைவான் வெய்
ற்காலத்திலும் மழைக்காலத்திலும் குடைகொடுப்பவனுக்கு மனத்
தில் ஒருவருத்தமும் ஒருகாலத்தும் உண்டாகாது அவன் கடின
மான ஆபத்திலிருந்து உடனே விடுபடுவான் ராஜனே! 'வண்டி
கொடுப்பது எல்லாத்தானங்களிலும் சிறந்தது' என்று மகானுபாவ
ரும் முக்காலங்களையும் அறிந்தவருமான சாண்டில்யரிஷி சொன்னார்"
என்றார்

---

## நூற்றொராவது அத்யாயம்

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி)

பாதரக்ஷை, எள், பூமி, பசு, அன்னம் இவற்றின் தானபலன் முதலியன

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! வெப்பத்தினால் கொதிப்புற்ற
பிராம்மணனுக்குப் பாதரக்ஷைகளைக்கொடுப்பவனுக்கு என்னபலன்
உண்டாகிறது? அதை எனக்குச் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர்
"யுதிஷ்டிர! பிராம்மணர்களுக்குப் பக்தியுடன் பாதரக்ஷைகளைக்
கொடுப்பவன் பகைவர்களையெல்லாம் நசுக்கி எல்லாக்கஷ்டங்களையும்
தாண்டிவிடுவான் அவன் சத்ருக்களுக்குமேலே இருப்பான் ராஜனே!
குந்திபுத்ரனே! கோவேறுகழுதைகள் கட்டினதும் வெள்ளியினாலும்
பொன்னினாலும் அலங்கரிக்கப்பட்டதுமாகிய வெள்ளைரதம் அவனுக்கு
வருகிறது பாதரக்ஷைகொடுப்பது குதிரைக்குட்டிகள் கட்டின
வண்டியைக்கொடுத்ததுபோலாகிறது" என்று சொன்னார்

யுதிஷ்டிரர், "கௌரவரே! திலதானம், பூமிதானம், கோதானம்,
அன்னதானம் இவற்றிற்குப் பலனைச் சொன்னீர் அதை மறுபடியும்
சொல்லக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார் "குந்தி
யின் புத்ரனே! கௌரவஶ்ரேஷ்டனே! திலதானத்தின் பலனை
நான் சொல்லுகிறேன்; கேள். கேட்டபிறகு, சாஸ்திரப்ப

தானமசெய எளளு, பிதருககளுககு முதலஆகாரமாகப பிரம
தேவால படைககபபடடது ஆதலால, எளளைததானம செ
வதனல பிதருதேவாகளினவாககம ஸநதோஷமடைகிறது 'மா
மாததில பிராமமணாகளுககு எளளைத்தானமசெயபவன ஜநதுக
ளெலலாம நிரமபியுளள நரகததைக காணன எளளைககொண
பிதருயாகம செயபவன ஸதாயாகஙகளெலலாஞசெயதவனுகிறான
ஈரததையிலலாமல எளளைககொண்டு ஈராததமசெயவது ஒருகாலு
தகாது கஈயபமகரிஷியின அஙகததிலிருநது எளளுணடானது பி
புவே! அதனல, தானவிஷயததில, எளளு தேவததனமைை
அடைநதிருககிறது எளளானது தேகபுஷடியையுமஅழகையுஙகொடு
பது, பாவததைப போககுவது ஆதலால, எளளுததானம எலலா
தானஙகளிலும சிறநதது சிறநதஞானியான ஆபஸதமபரும ச
கருமை லிகிதரும கௌதமமகரிஷியும திலதானததினல மேலுலகட
அடைநதாகள பிராமமணாகளெலலாரும இநதிரியஙகளை ஜயிததவ
களாகி எளளை ஹோமஞசெயதுகொணடிருககினறனா எளளு, ப
வினநெயககுச சமமானது, ஸநததிவிருததிககும காரணமானது
ஆதலால, எலலாததானஙகளிலும திலதானம சிறநதது இவவு
கததில எலலாததானஙகளுளளும் திலதானம அழிவிலலாததெனறு
சொலலபபடுகிறது முறகாலததில நெயஇலலாமறபோனபோது வி
ஞன குசிகனெனனுமராஜரிஷி மூனறககினிகளிலும எளளைஹோ
மமசெயது உததமகதியைஅடைநதானெனறு சொலலபபடடிருககி
றது குருஸரேஷடனே! அதனல, திலதானமானது மிகசசிறநத
தாகச சொலலபபடுகிறது எநதமுறைபபடி திலதானஞசெயவது
ஸலாககியமெனபதைபபறறித தேவாகளயாகஞசெயயததொடஙகின
விஷயததை இனிசசொலவேன, கேள பூமிககதிபதியே! மகா
ராஜனே! தேவாகள பூமியில ஒருபாகததில யாகஞசெயயககருதி
ஸவயமபுவான பிரமமதேவருடைய ஸபையில அவரைசசநதித்து
'நாஙகள யாகமசெயயவேணடும' எனறு புணணியக்ஷேததிரததைக
கேடடனா 'பகவானே! பூமிககும ஸவாககததிறகும எலலாவற
றிறகும நீரே பிரபு மஹானுபாவரே! உமது அனுமதியினமேல்
நாஙகள யாகமசெயயககடவோம உமமால அனுமதிகொடுககப
படாதபூமியில யாகம பயனபெருது தாவரமும ஜஙகமமுமாகிய
உலகமனைததுககும நீரே பிரபு ஆதலால, நீா அனுமதிகொடுகக
வேணடும' எனறனா பிரமமதேவா, 'தேவஸரேஷடாகளே! கஈய
பாபுததாகளே! பூமியில நீஙகளயாகம செயவதறகுரிய இடத்தை உங

ஞககுக கொடுபபேன' எனறுசொனஞா தேவாகள, 'பகவானே!
கள இஷடம நிறைவேறிறறு இநததேசததை எபபோதும்
ஷிகள அடுததிருககினறனா இஙகே பிரமபினதக்ஷிணைகளோடு
கஞுசெயவோம' எனறு சொனஞாகள அபபோது, அகஸதியா,
ணவா, பருகு, அதரி, வருஷாகபி, அஸிதா, தேவலாஆகிய இநத்
ஷிகள தேவாகளின யாகததிறகு வநதனா மஹாதமாககளான
தவாகள பிறகு தவறுதலிலலாமல யாகமசெயதனா அபபடியே
தவஸரேஷடாகள சரியானகாலததில யாகததை முடிததனா அந
துதேவாகள மலைகளிறசிறநத இமயமலையில யாகஞுசெயது அமமலை
ல ஆறிலொருபாகததை அநதயாகததில பூமிதானமாககசெயதனா
றால அனுபவிககபபடாத பூமியில சாணளவாவது கொடுபபவன
புததில அகபபடமாடடான, நரகஙகளை அடையான குளிா காறறு
வயயில இவைகளைததாஙகுவதும நனறுககசெவவைபபடுததபபட
துமாகிய யாகபூமியைத தானமசெயபவன புணணியமுடிநது ஸவா
கலோகததிலிருநது அசைககபபடுவதிலலை அரசனே! அநத அறி
ளளவன இநதிரனுடன மகிழநது வஸிபபான இருககதானம
சயகிறவனும ஸவாககததில பூஜிககபபடுவான வேதமோதுவிபப
ாகளின குலததிறபிறநதவனும வேதமோதினவனும புலனகளை
டககினவனுமாயிருபபவன ஸநதோஷமாகவஸிககுமபடி வீட்டைக
காடுததவன சிறநதலோகததைஅடைவான பரதஸரேஷடனே! அப
டியே பசுககளுககாகக குளிரையும மழையையும தாஙகததகக
றுதியான கொடடில செயயபபடுவது ஒருகுலததில ஏழுதலைமுறை
ரையில கரையேறறிவிடும பயிாசெயயததகக பூமியைததானம்
சயபவன உலகததில மேலானஐசுவரியததை அடைவான ரத
ஙகளுளள பூமியைககொடுபபவன தனகுலததின ஸநததியைப
பருககசெயவான களாநிலததையும எரிநதுபோன பூமியையும
டலையினலசூழபபடட பூமியையும பாவிகளிருககுமபூமியையும
வவகையிலும தானமசெயயலாகாது அயலானுடைய பூமியில
ிதருககளுககு ஸராததமசெயதாலும அநதப பூமியை ஸராததததில்
ானமசெயதாலும அநதஸராததகருமம கெடும ஆதலால,
தரிநதவன கொஞசமபூமியையாவது விலைககுவாஙகி அதைத்
ானமசெயயவேணடும பிதருககளுககும (தானவாஙகின) அதில்
ிணட்தானமசெயவதுதான அக்ஷயமாகும காடுகள மலைகள நதி
ள புணணியதீாததஙகள் இவைகளெலலாம யாருககும சொநதமல்
ாதவையென்று சொலலுகினறனா அவறறில எவனுககும உரி

மையிலலை அரசனே! இவவாறு பூமிதானததினபலனைபபறறி சொனனேன குறறமறறவனே! இதறகுமேல கோதானததை பறறி உனககுச சொலவேன

பசுககள எலலாரிஷிகளையும பாாககிலும மேறபடடவையா யின, பகவானுன சிவபெருமான அவறறுடனகூடத தவமசெயதா பாரதனே! தவஸிததிபெறறபிரமமரிஷிகள வேணடும சிறநதகதிய கிய பிரமமலோகததில சநதிரனுடனகூட இநதபபசுககள வஸிககின றன பாரதனே! அவை பாலினுலும நெயயினுலும தயிரி லும கோமயததினுலும தோலினுலும எலுமபுகளினுலும கொம களினுலும வாலகளினுலும உபகாரமசெயகினறன அவறறிறகு குளிரும வெயயிலுமிலலை அவை எபபோதும வேலைசெயகினற அவறறிறகு மழையினல கஷடமுணடாவதிலலை ஆதலால, பிரா மணாகளுடனகூடவே உயாநதபதததை அடைகினறன ஆதலா ஞானிகள பசுககளையும பிராமமணாகளையும ஒனருகப பேசுகினறனா ராஜனே! ரநதிதேவனெனனும அரசனுடைய யாகததில ஆககள தா யாகபசுககளாகச செயயபபடடன அநதபபசுததோலகளினினறு சாமணவதியெனனுமநதி பெருகியது. அவை யாகபசுவாவ னினறு விடுவிககபபடடுத தானததிறகுரியவைபாக விதிகக பபடடன. ராஜனே! அபபடிபபடடகோககளைப பிராமமண ஶரேஷடாகளுககுத தானமசெயபவன கஷடமானநிலைமையிலிரு நதாலும கடினமான ஆபததைத தாணடிவிடுவான ராஜனே! ஆ ரமபசுககளைத தானமசெயபவன இறநதபின நாகமபுகான, எலல விடஙகளிலும ஜயததையும பெறுவான ஆககளினபால அமு மெனறு தேவேநதிரன சொனனன ஆதலால, பசுவைத தானமசெ தவன அமுதமகொடுததவனுகிறுன அககினிகளில ஹோமமசெய தறகு ஆவினநெயதான குறறமறறதெனறு வேதமறிநதவா நினை கினறனா ஆதலால, ஆவைககொடுததவன ஹோமலாகனததை கொடுததவனுகிறுன விருஷபமானது உருககொணடுவநதஸவாககம ஆதலால, பசுககளுககுததலைவனுகிய விருஷபததைக குணமுளள பிராமமணனுககுககொடுப்பவன ஸவாககததில பூஜிககபபடுகிறுன பாதஶரேஷடனே! பசுககள பிராணிகளின உயிரெனறு சொலலபபடு கினறன ஆதலால, பசுவைககொடுபபவன உயிரைககொடுபபவ கிறுன பசுககள பிராணிகளைககாபபனவையெனறு - வேதமறிநதவா நினைககினறனா ஆதலால, பசுவைககொடுபபவன ரகூஷணததைக கொடுபபவனுகிறுன பாதஶரேஷடனே! கொலவதறகுப பசுவைக கொடுககலாகாது அபபடியே, உழவனுககும நாஸதிகனுககும பசு

ளலஜீவிப்பவனுக்கும் யாகத்திற்குமுக்கியமான ஆவின்பால் நெய் முதலியவற்றைவிற்பவனுக்கும் கோதானம் செய்யலாகாது அது யாகத்திற்கு முக்கியமானது மேற்சொன்ன பாவச்செய்கையுள்ள வர்களுக்குக் கோவைக்கொடுப்பவன் முடிவில்லாத நரகத்திற்காளாவா னென்று மகரிஷிகள் கூறுகின்றனர் இளைத்ததும் கன்றுபோன தும் மலடும் நோயுள்ளதும் அங்கப்பிழையுள்ளதும் சக்தியற்றது மானகோவைப் பிராமமணனுக்குத் தானஞ்செய்யலாகாது பதினா யிரங்கோக்களைச் சரியாகத்தானஞ்செய்யுமனிதன் இந்திரனுடன் கூடியிருப்பான், நூற்றுக்கணக்கும் ஆயிரக்கணக்குமான அழிவில் லாத உலகங்களை அடைவான் பாரதனே! கோதானத்தையும் தில தானத்தையும் பூதானத்தையும்பற்றி இவ்வாறு உனக்கு உரைத் தேன் அன்னதானத்தைப்பற்றியும் கேள் குந்திபுத்ரனே! அன்ன தானம் முதன்மையென்று நிச்சயிக்கின்றனர் அன்னதானத்தினால் தான் ரந்திதேவனென்னுமரசன் ஸ்வர்க்கம் சென்றான் பூமியைக் காப்பவனே! மனிதருக்கதிபதியே! பசியினால் வருந்தினவனுக்கு அன்னம்போடுகிறவன் எவனோ அவன் மேலானபிரம்மலோகத்திற் குச் செல்வான் பாரதனே! பிரபுவே! மனிதர்கள் அன்னதானம் செய்வதனால் மேன்மையை அடைவதுபோல், பொன் வஸ்திரங்கள் முதலிய மற்ற எவற்றைத்தானஞ்செய்வதனாலும் அடைவதில்லை அன் னந்தான் முதன்மையானபொருள் அன்னமே சிறந்தலக்ஷ்மியென்று நினைக்கப்படுகிறது உயிரும் ஒளியும் பராக்கிரமமும் தேகவன்மை யும் அன்னத்தினாலுண்டாகின்றன எந்தமனிதன் எப்போதும் மன ஏகாக்கத்துடன் கேட்டவுடன் அன்னம்போடுகிறானோ அவன் நரகங் களை அடைவதில்லையென்று பராசரர் சொல்லியிருக்கிறார் தேவர் களுக்கும் சாஸ்திரப்பிரகாரம்பூஜைசெய்தபிறகு அன்னத்தை நிவேத னஞ்செய்யவேண்டும் ராஜனே! எந்தஆகாரத்தை மனிதர்கள் புசிக் கின்றனரோ அதுதான் அவர்கள்தேவதைகளின் ஆகாரம் வளர் பிறையில் நிலவில் அன்னம்போடுகிறவனெவனோ அவன் மறுமையில் நரகங்களைத்தாண்டி முடிவில்லாத ஸுகம் பெறுகிறான். பரதஸ்ரேஷ் டனே! எவன் தானபுசியாமல் விருந்துக்கு ஸ்ரத்தையுடன் அன்னம் போடுவானோ அவன் பிரம்மஞானிகள் அடையும் உலகங்களை அடை வான் அன்னதானஞ்செய்யும்புருஷன் மிக்ககடினமான ஆபத்தை அடைந்தாலும் அதைத் தாண்டிவிடுவான், பாவத்தையும் தாண்டுவான்; முந்திய தீவினையையும் குறைத்துக்கொள்வான். இவ்வாறு அன்னதா னம், திலதானம் பூதானம் கோதானம் இவற்றின்பயன்கள் உரைக்கப் பட்டன," என்றார்.

## நூற்றிரண்டாவது அத்யாயம்

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி)

(தண்ணீர்கொடுப்பதன்பலன்முதலியன)

யுதிஷ்டிரர், "ஐயா! பாரதரே! தானங்களின்பலன்களை நீ சொல்லக் கேட்டேன் இப்போது, அன்னதானம் விசேஷமாகச் சிலாகிக்கப்பட்டது பிதாமஹரே! தண்ணீர்கொடுப்பதற்குப் பெரும் பலன் இருப்பதேன்னென்பதை விரிவாகக்கேட்க விரும்புகிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்

"பரதஸ்ரேஷ்டனே! ஸந்தோஷம் உனக்குச் சரியாகச்சொல்லுவேன் தவறாதபராக்ரமமுள்ளவனே! இப்போது நான் சொல்லுவதைக்கேள் குற்றமற்றவனே! பலன்பெறத்தகுந்த அன்னபானங்களின் தானமுதலான எல்லாத்தானங்களைப்பற்றியும் சொல்வேன். இவ்விரண்டுதானங்களுக்கு மேற்பட்டதானம் ஒன்றுமில்லையென்பது என்னிச்சயம் அப்பா! பிராணிகளெல்லாம் அன்னத்தினாலே உண்டாகின்றன ஆதலால், உலகத்தில் அன்னதானமொன்றுதான் எல்லாத்தானங்களிலும்சிறந்ததென்று சொல்லப்படுகிறது எப்போதும் பிராணிகளுக்கு வன்மையும் உற்சாகமும் ஆகாரத்தினால் விருத்தியாகின்றன அதனால், அன்னதானம் மிகச்சிறந்ததென்று பிரமதேவர் சொல்லியிருக்கிறார் குந்திபுத்ரனே! இது இப்படித்தான், மாறாது 'அன்னங்கொடுத்தமனிதன் பிராணதானம் செய்தவனாகிறான். இவ்வுலகத்தில் பிராணதானத்திற்குமேற்பட்டது ஒன்றுமில்லை' என்று தேவர்களசெய்த ஸத்ரயாகமென்னும்மஹாயாகத்தில் ஸாவித்ரிதேவியின்சிறந்தவாக்கியம் கேட்கப்படுகிறது சிறந்தஜனங்களையுடையவனே! முன்னர், சிபிசக்ரவர்த்தி புறவுக்குஉயிரைக்கொடுத்து என்னபலனைஅடைந்தானென்பதைப்பற்றி லோமசமுனிவர்சொன்னவாக்கியத்தையும் நீ கேட்டிருக்கிறாயன்றோ? அரசனே! பிராமணனுக்கு அன்னதானஞ்செய்பவன் எந்தக்கதியை அடைவனோ அதற்குமேற்பட்டகதியைப் பிராணதானஞ்செய்பவன் அடைவனென்று நாம் கேட்டிருக்கிறோம் கௌரவஸ்ரேஷ்டனே! அன்னமும் ஜலத்தினாலுண்டாகிறது. ஜலமின்றி உண்டாவது ஒன்றுமில்லை நவக்கிரகங்களுக்குமதிபதியும் மகிமைபொருந்தினவனுமான சந்திரன் ஜலத்திலுண்டானவன் ஜலமே அமிர்தம் அமிர்தமே ஜலம் மனிதர்களுக்கதிபதியே! மஹாராஜனே! எவற்றினால் பிராணிகளுக்கு உயிர்

உண்டாகிறதோ அந்தச்செடிகளும் கொடிகளும் ஜலத்தினுலுண்டா கின்றன. தேவர்களுக்குஅமிர்தமும் நாகர்களுக்குஸ்வதையும் பித ருக்களுக்குஸ்வதையும் பசுக்களுக்குப்புற்பூண்டுகளும் ஆகாரங்களெ ன்று சொல்லப்பட்டிருக்கின்றன. மனிதர்களுக்கு அன்னந்தான் பிராணனென்று அறிஞர்கள் கூறுகின்றனர். புருஷஸ்ரேஷ்டனே! இவையெல்லாம் ஜலத்தினுலுண்டாகின்றன. ஆதலால், தண்ணீர் கொடுப்பதற்கு மேற்பட்டதானம் எதுவுமில்லை. தன்னுடைய நன் மையை விரும்புகிறமனிதன் எப்போதும் தண்ணீர்கொடுக்கவேண்டும். ஜலதானமானது இவ்வுலகத்தில் பொருளையும் புகழையும் ஆயுளையும் கொடுப்பதென்று சொல்லப்படுகிறது. குந்திபுத்ரனே! தண்ணீர் கொடுப்பவன் எப்போதும் பகைவருக்கு மேற்பட்டிருப்பான். தண் ணீர்கொடுப்பவன் இவ்வுலகத்தில் தான்வேண்டினவையெல்லாவற் றையும் அழியாதபுகழையும் அடைந்து இறந்தபின்னும் பாவங்களி னின்றும்விடுபட்டுஅளவற்றஆனந்தத்தை அடைவான். புருஷஸ்ரேஷ் டனே! சிறந்தபராக்கிரமமுள்ளவனே! தண்ணீர்கொடுப்பவன் ஸ்வர்க் கத்திற்குப்போய் அழிவில்லாதலோகங்களையும் அடைவான்' என்று மநுகூறினர்" என்றார்.

---

நூற்றுமுன்றுவது அத்யாயம்

## தானதாமபர்வம் (தொடர்ச்சி)

(எள்முதலியவற்றின் தானத்தைப்பற்றி யமனுக்கும் ஒருபிராம் மணனுக்கும்நடந்த சம்பாஷணை)

யுதிஷ்டிரர், "திலம், தீபம், அன்னம், வஸ்திரம்இவற்றின் தானங்கள் எப்படிப்பட்டவையென்பதைப்பற்றி மறுபடியும் எனக் குச்சொல்லக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானர்:

"யுதிஷ்டிர! இந்தவிஷயத்திலும் ஒருபிராம்மணனுக்கும் யம னுக்குமநடந்த ஸம்பாஷணையாகிய ஒருபழைய இதிஹாஸம் கூறுகின் றனர். 'ராஜனே! கங்கையமுனை இவற்றினடுவில் யமுனைஉற்பத்தி யாகும் களிந்தமலையின்கீழுள்ள மத்தியதேசமென்னுந்தேசத்தில் பர்ணசாலையென்று பெயர்பெற்ற அழகான பெரிய பிராம்மணகிராமம் ஒன்றிருந்தது. அந்தக்கிராமத்தில் வித்வான்களான பிராம்மணர்கள் அதிகமாகவஸித்தனர். அப்போது யமன் கரியவஸ்திரமுடுத்தவ னும் சிவந்தகண்களும் நெறித்தஉரோமங்களும் காகைபோன்ற

-கணுக்கால்களும் கணுமுகக்குக்களுமுள்ளவனுமான ஒருகிங்கரனைப்பார்த்து, 'நீ பிராம்மணகிராமத்திற்குப் போ, போய் அவவிடத்திலிருந்து சாந்தியுள்ளவனும் வித்வானும் வெளிப்படையாக ஓதுவிப்பவனும் அகஸ்தியகோத்ரத்தானுமாகிய சாமியென்றுபெயருள்ள அந்தப்பிராம்மணனை அழைத்துவா, அவன்பக்கத்தில் அவன்கோத்திரமாகவேயிருக்கும் மற்றொருபிராம்மணனை அழைத்துவராதே அவனும் இவனைப்போன்றகுணமுள்ளவன்தான் கல்வியிலும் குலத்திலும் இவனுக்கொப்பானவன்தான், புத்ரஸந்தானத்திலும் ஒழுக்கத்திலும் இந்தப்புத்திசாலிக்கே சமமானவன் ஆகிலும், நான் குறிப்பிட்டவனையே அழைத்துவா அவனுக்கு நான் பூஜைசெய்ய வேண்டும்' என்று சொன்னான் அந்தவேலைக்காரன் சென்று யமனுடையகட்டளையை மாறுகச்செய்தான், எவனை வேண்டாமென்று யமன்சொன்னானோ அவனையே பிடித்துக்கொண்டுவந்தான் சிறந்த சக்தியுள்ளயமன் எழுந்திருந்து அவனுக்குப் பூஜையைச்செய்து, 'இவனைக் கொண்டுபோ, அந்தமற்றொருவனைக் கொண்டுவா' என்று தூதனை ஏவினான் யமன் இவ்வாறுசொன்னபோது, ஓதினதினால் வைராக்கியமுள்ள அந்தப்பிராம்மணன், தர்மராஜனைப்பார்த்து, 'ஈ தர்மத்தவறுதவனே! என்னுடைய ஆயுளின்மிச்சமுள்ளகாலமவரையில் இங்கேயே வஸிப்பேன்' என்றுசொன்னான் யமன், 'காலவிதியை நான் இங்கே எவ்வகையிலும் அறியமாட்டேன் எவன் தர்மத்தைச் செய்கிறானோ அவனைமட்டும் நான் அறிவேன் சிறந்தமகிமையுள்ள பிராம்மணனே! நீ இப்போதே உன்இருப்பிடத்திற்குச்செல் ஆசாரந்தவறாதவனே! உனக்கு நான் என்னசெய்யவேண்டுமென்பதெல்லாம் இஷ்டப்படி செவ்வையாகச்சொல்' என்றுகேட்டான் பிராம்மணன், 'பரிசுத்தமானதானந்தான் மிகச்சிறந்தபுண்ணியமாகும் அதை எனக்குச்சொல் மிகச்சிறந்தவனே! மூவுலகங்களிலுமுள்ள யாவருக்கும் நீதானே உபதேசிப்பவன்?' என்றுகேட்டான் யமன், 'பிரம்மரிஷியே! தானத்தைப்பற்றியஉயர்ந்தவிதியைச் சரியாகச்சொல்லுகிறேன், கேள் இவ்வுலகத்தில் திலதானம் மிகச்சிறந்தது, அழிவில்லாதபுண்ணியம் பிராம்மணோத்தமனே! ஒருவன் தன்னாற்கூடிய மட்டும் திலதானஞ்செய்யவேண்டும் நித்தியதானஞ்செய்வதனால் எள்ளானது வேண்டினவற்றையெல்லாம் நிறைவேற்றுகிறது ஸ்ராத்தத்திற்கு எள்ளைத்தான் மேலாக்கியமாகச்சொல்லுகின்றனர் அது தான் தனக்குயாவில்லாததானம் பிராம்மணர்களுக்குச் சாஸ்திரத்திற்சொன்னமுறையோடு தில்தானஞ்செய் வைகாசிமாதம் பௌர்ண

மாஸியில் பிராம்மணர்களுக்குத் திலதானம் செய்யவேண்டும். கிருத்திகையில் எல்லாவிதமான நன்மையையும் வேண்டுகிறவர்கள் எப்போதும் ளை உண்பிக்கவேண்டும்; (எண்ணெயை) உடம்பில் தடவிக்கொள்ளவேண்டும், அப்படியே ஜலத்தையும் எப்போதும் கொடுக்கவேண்டும் ஆசமனமும் செய்யவேண்டுமென்பது நிச்சயம். ஓடைகளையும் குளங்களையும் கிணறுகளையும் வெட்டுவிக்கவேண்டும். பிராம்மணோத்தமனே! இவ்வுலகத்தில் ஜலம் மிக அரிது. நீ ஜலத்தை எப்போதும் கொடுக்கவேண்டும். இது எல்லாவற்றிலும் சிறந்த புண்ணியம். பிராம்மணோத்தமனே! நித்தியமாகத் தண்ணீர் கொடுப்பதற்காகத் தண்ணீர்ப்பந்தல்களைச் செய்விக்கவேண்டும். உண்டவர்களுக்குத் தண்ணீர் கொடுப்பது முக்கியமான காரியம். தண்ணீர் வேண்டுகிறவனைக் கண்டவுடன் அன்போடு விரைந்து கொடுப்பது முக்கியம். வஸ்திரதானம் செய்பவன் அதன் நூலளவு வருஷகாலமும், தீபதானம் செய்பவன் அது எரியும் நிமிஷங்களளவு வருஷகாலமும், கோதானம் செய்பவன் அவற்றின் ரோமங்களினளவு வருஷகாலமும், தண்ணீர் கொடுப்பவன் அந்தத் தண்ணீர்த் துளிகளளவு வருஷகாலமும் ஸ்வர்க்கஸுகத்தை அனுபவிப்பார். ஆதலால், இந்தத் தானங்களை நீ நடத்தக்கடவாய்' என்று சொன்னான்." யமன் இவ்வாறு சொன்னபிறகு அந்தயமதூதனால் அந்தப்பிராம்மணன் தன் வீட்டிற்குக் கொணர்ந்துவிடப்பட்டு யமன் சொன்னவற்றையெல்லாம் செய்தான். யமதூதனும் அவனைக் கொணர்ந்துவிட்டவுடன், அந்தச்சாமியென்பவனை எடுத்துக்கொண்டு சென்று தர்மராஜனிடம் ஒப்பித்தான். சிறந்த மகிமையுள்ள தர்மராஜன் தர்மந்தெரிந்த அந்தப்பிராம்மணனைப் பூஜித்து அவனோடும் ஸம்பாஷணை செய்து வந்தபடியே அவனை அனுப்பினான். அவனுக்கும் முன்சொன்ன உபதேசத்தையெல்லாம் யமன் சொன்னான். அந்தப் பிராம்மணனும் யமலோகம் போய்த் திரும்பிவந்தபிறகு யமன் சொன்னதையெல்லாம் செய்தான். பிதுருக்களுக்குப் பிரியமுண்டாக்குவதற்குத் தீபதானத்தை முக்கியமாக யமன் ஸ்லாகித்தான். ஆதலால், நித்யம் தீபங்கொடுப்பவன் பிதுருக்களைக் கரையேற்றுவான். பரதஸ்ரேஷ்டனே! பிரபுவே! ஆதலால், தேவர்களுக்கும் பிதுருக்களுக்கும் தனக்கும் கண்ணுக்கினியவையான தீபங்களை எப்போதும் அளிக்கவேண்டும். ராஜனே! ரத்நதானமும் மிகச்சிறந்த புண்ணியமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அவற்றை விலைக்கு வாங்கித் தானஞ்செய்யும் பிராம்மணனுக்கு அவை பயத்தைப் போக்குகின்றவை. பிராம்மணன் அயலானிடம் ரத்நத்தைத் தக்ஷிணையாகப்பெற்றுக்

கொண்டு அதைப் பிராம்மணர்களுக்குக் கொடுப்பனுயின், கொடுத்தவன் வாங்கினவன் இருவருக்கும் அதுவே அழியாத புண்ணியமாகும் 'நல்ல நிலைமையிலிருப்பவன் அப்படித் தானஞ்செய்பவனுக்கு ரத்தினத்தைத் தக்ஷிணையாகக்கொடுப்பானுனல், அது அவ்விருவருக்கும் அழியாத புண்ணியம்' என்று தாமறிந்த மனு சொல்லுகிருர் வஸ்திரங்களைக் கொடுப்பதனுல் ஒருமனிதன் தன்மனைவியை நீங்காதவனும் சிறந்த ஆடையாபரணங்களையுடையவனுமாவானென்று கேட்டிருக்கிறோம் புருஷஶ்ரேஷ்டனே! வேதத்தைப் பிரமாணமாக்கொண்டு கோதானம் ஸுவர்ணதானம் திலதானம் இவற்றைப்பற்றிப் பலவகையாகச்சொன்னேன் விவாகங்களைச்செய்துகொண்டு புத்ரர்களை உற்பத்திபண்ணவேண்டும் கௌரவனே! புத்ரலாபமானது எல்லா லாபங்களிலும் சிறந்தது" என்ருர்

---

## நூற்றுநான்காவது அத்யாயம்

## தானதாமயாவம். (தொடர்ச்சி)

(கோதானம், பூதானம், பசுக்களையும் பிராம்மணர்களையும் காத்தல் முதலியன)

யுதிஷ்டிரர், "கௌரவஶ்ரேஷ்டரே! மிகத்தெரிந்தவரே! தானங்களின் சிறந்த விதியைப்பற்றியும் முக்கியமாகப் பூமிதானத்தைப்பற்றியும் திரும்பவும் சொல்லக்கடவீர் க்ஷத்திரியன் யாகம்செய்விக்கும் பிராம்மணனுக்குச் சாஸ்திரப்படி பூமியைக்கொடுப்பான், அந்தப்பிராம்மணன் பெற்றுக்கொள்வான் மற்றொருவன் கொடுக்கத் தகாதோ? தானபலனை விரும்புகிற எல்லாவருணத்தாரும் கொடுக்கக்கூடியதும் வேதத்தில் விதிக்கப்பட்டதுமாயுள்ள தானத்தை எனக்கு உரைக்கக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானுர்:-

"இவ்வுலகத்தில் பசு பூமி கல்வி இம்மூன்றும், 'கோ' என்று ஒரே பெயருள்ளவையும் ஒரே பயனுள்ளவையும் வேண்டினபலன்களையெல்லாம் கொடுக்கத்தக்கவையும் தானத்திற்குரியவையுமான பொருள்கள் தாமத்தையும் பிரம்மத்தையும் தெரிவிப்பதான ஸரஸ்வதியைச் சிஷ்யனுக்கு உபதேசிப்பவன் பூதானம் கோதானங்களுக்குச் சமமான்பலனை அடைவான் கோக்களையும் அப்படியே சிலாக்கியமாகச் சொல்லுகின்றனர் தானத்திற்குரியது அதற்கு மேற்பட்டது ஒன்றுமில்லை யுதிஷ்டிர! கோக்களிடத்தில் உடனே

ர்ன. அவற்றிற்குவில்லை ஸவல்பம் [1] பசுக்கள் எல்லாருக்கும் தாய
், எல்லாஸௌக்கியங்களையும் கொடுப்பவை அபிவிருத்தியாக்க
ந்துகிறவன் எப்போதும் கோக்களைப் பிரதக்ஷிணம் செய்யவேண
், அவற்றைக் காலாலுதைக்கலாகாது, அவைகளினிடையில்
ல்லலாகாது அவை மங்களங்களுக்கெல்லாம் இருப்பிடமான
வதைகள் ஆதலால், கோக்களை எப்போதும் பூஜித்தலவேண்டும்.
லைகளைச்செய்யும் விருஷபங்களைச் சாட்டையினாலோட்டுவது முத
லேயே கடவுளால் விதிக்கப்பட்டது அது குற்றமன்று மற்ற
்யங்கள் அதற்குப்பின்னிட்டவை நடக்கும்போதும் படுத்திருக்
போதும் தெரிந்தவன் பசுக்களைப்பயமுறுத்தலாகாது தாகித்து
ாக்கும் ஆக்கள் மனிதனைச் சுற்றத்துடன் கொன்றுவிடும் பிதருக
ின ஸதானங்களும் தேவாலயங்களும் எவற்றின் கோமயத்தினால
போதும் சுத்திசெய்யப்படுகின்றனவோ அவற்றிற்கு மேலானபரி
த்தம் என்ன இருக்கிறது? ஒருவன் [2] தான் ஆகாரம் செய்வதற்கு
ன அயலாபசுவுக்கு ஒருபிடிபுல் ஒரு வருஷங்கொடுத்தால் அவ
க்கு அது எல்லாவிருப்பங்களையுந்தரும் விரதமாகும் அவன் புத
களையும் புகழையும் பொருளையும் ராஜ்யத்தையும் அடைவான்.
பத்தையும் கெட்ட கனவையும் அது ஒழித்துவிடும்" என்றார்.

யுதிஷ்டிரர், "என்னலக்ஷணங்களுள்ள பசுக்களைத் தானஞ்செய்ய
ண்டும்? எவற்றைச் செய்யாமல்விடவேண்டும்? எப்படிப்பட்டவ
க்குக் கொடுக்கவேண்டும்? எப்படிப்பட்டவனுக்குக் கொடுக்கத்
ாது?" என்று கேட்க, பீஷ்மர்சொல்லலானார் "கெட்டஒழுக்கமுள
னுக்கும் பாவஞ்செய்பவனுக்கும்பொருளாசைக்காரனுக்கும் பொய
ொல்லுகிறவனுக்கும் தேவகாரியங்கள் பிதருகாரியங்களைவிட்டவ
க்கும் எவ்வகையிலும் கோதானஞ்செய்யலாகாது யாசிப்பவனும்
ிகப்பிள்ளைகளையுடையவனும் அக்நிஹோத்திரஞ்செய்பவனுமாகிய
தமோதின பிராமணனுக்குப் பத்துப்பசுக்களைத் தானஞ்செய்வ
ால், தானஞ்செய்பவன் மிகச்சிறந்தலோகங்களை அடைவான். பசுக
ின பாலநெய் முதலியவற்றை ஹோமஞ்செய்பவனும் அவற்றோடு

---

1 'யஜுஸ்ஸுக்ருஷி முதலிய வேலைகளிலிருக்கும் விருஷபங்களை ஒட்டு
து தேவர்களால் விதிக்கப்பட்டது அவைகளிரண்டிலும் யாகத்திற
க்த ஆண்டுவது ஸம்ரயஸைச்செய்யும் வைதிகமான எதற்கும்பிந
ன லௌகிகவ்யவஸாயம் நிந்திக்கத்தக்கதாகும்' என்பது பழையவுரை
2 'அதன் மோர் முதலியவற்றை அடையாமல்' என்பது பழைய
ரை.

போஜனம் செய்விப்பவனும் அவற்றைத் தான் செய்பவனும் இந்த காரியங்களில் ஏவப்பட்டவனும் எல்லாப்புண்ணிய பலன்களையும் அடைவார். தவம் செய்பவனுக்குக்கொடுப்பவனும் அவனுக்கு உதவியாயிருப்பவனும் அவன் தவப்பயனைத்திலும் பாகத்தையுடையவர். மனிதனுக்குத் தன்னை உற்பத்திபண்ணினவன், பயத்தில் காப்பாற்றினவன், [1] ஜீவனத்தையுண்டுபண்ணினவன் இம்மூவரும் தந்தைகள். குருவுக்குப் பணிவிடைசெய்வது பாவத்தைப்போக்குகின்றது. கோபமானது பெருமையை அழிக்கிறது. புத்ரனில்லாமையை [2] மூன்று புத்ராகள் நிவிருத்திசெய்கின்றனர். பசுக்கள் வறுமையை போக்குகின்றன. வேதாந்தத்தில் நிச்சயமுள்ளவனும் கலவிகேள்விகளமிருந்தவனும் சிறந்த அறிவினால் திருப்தியடைந்தவனும் புலன்களையடக்கினவனும் ஒழுக்கந்தவறாதவனும் மனத்தை ஜயித்தவனும் சாஸ்திரத்திற் கட்டுப்பட்டவனும் எல்லாருக்கும் எப்போதும் இன்சொற்சொல்லுகிறவனும் பசிக்குப்பயந்து தகாதகாரியம்செய்யாதவனும் தயையுள்ளவனும் ஒழிவுள்ளவனும் விருந்துகளைவிரும்புகிறவனும் பிள்ளைப்பெண்டிர்களுள்ளவனும் ஒரே குணமுள்ளவனுமான பிராமணனுக்கு ஜீவனத்தைக்கொடுக்கவேண்டும். நல்லதகுதியுள்ளவனுக்குக் கோதானம்செய்வதனால் எவ்வளவு குணங்களிருக்கின்றனவோ அவ்வளவுகுற்றங்கள் பிராமணன் பொருளையபகரிப்பதனால் உண்டாகின்றன. பிராமணன் பொருளையபகரித்தால் எல்லா வகையிலும் குற்றமுண்டு. பிராமணர்களின் மனைவிகளையும் தூரத்தில்விடவேண்டும். பிராமணன் மனைவியும் பொருளும் அபகரிக்கப்பட்டபோது சக்தியினால் காப்பாற்றினவர்களுக்கும் அதற்காக உயிர்விட்டவர்களுக்கும் நமஸ்காரஞ்செய்கிறேன். அவர்கள் துன்பஞ்செய்யப்படும்போது, காப்பாற்றாதவரைச் சூரியன் புத்ரனான யமன் எக்காலமும் தண்டித்துக்கொண்டும் பயமுறுத்திக்கொண்டும் நரகத்தை விருந்துவிடுவதில்லை. அப்படியே கோக்களைக்காப்பதிலும் பீடிப்பதிலும் நன்மையும் தீமையும் முறையே வருகின்றன. பிராமணர்களின் கோக்களையும் மனைவிகளையும் ரக்ஷிப்பதில் விசேஷ புண்ணியமுண்டாகிறது.

---

[1] தானம் செய்தவன்.

[2] மூன்றுபுத்ராகளுக்குக் குறைந்தால் இல்லாமைக்குச் சமானம்.

நூறைந்தாவது-அத்யாயம

## தானதர்மபாவம் (தொடர்ச்சி)

(பிராம்மணருடைய பொருளைக் கவராலாகா தென்பதற்கு உதாரணமான ந்ருகன்கதை)

கௌரவஸ்ரேஷ்டனே! பிராமமணனசொததை அபகரிபதனாலும இநதவிஷயமபறறியே, நருகனெனனும அரசன மிகபெருமகஷடததை அடைநதானெனறு பெரியோாகள கூறுகினறனர். குநதிபுதரனே! முனனா துவாரகைநகா ஏறபடுமபோது புறகளாலுபபூணடுகளாலுமமூடபபபடட ஒருபெருமகிணறு காணபபடடதெனறு கேளவி அநதககிணறறிலிருநது ஜலமெடுபபதறகாக முயறசிசெயதவாகள, அநதஜலம முழுதும மூடபபடடிருநததனால மிகவருததமுறறனா அவாகள பருததஉடலுளள ஓா ஓணான அநதககிணறறிலிருநததைக கணடனா அவாகள மலைகபோலபபான அநதஓணானை ஆயிரககணககான கயிறுகளாலும தோலவாாகளாலும கடடிததூககமுயறசிசெயதும எடுககமுடியாமல வாஸுதேவரிடமசெனறு அவரிடம 'ஒருபெரியஓணான கிணறறின துவாரததை மூடிககொணடிருககிறது அதையெடுககததககவன யாருமிலலை' எனறுதெரிவிததனா அநத நருகராஜன கிருஷணனால தூககபபடடு எனனவேணடுமெனறு விசாரிககபபடடபோது, 'நான ஆயிரமயாகஙகளசெயத பழமையானவன' எனறு தனனை அவருககுத தெரிவிததான. அவவாறுசொலலும அவவரசனைபபாாததுக கணணபிரான, 'ராஜனே! நீ புணணியகருமம செயதிருககிறாயேயனறிப பாவமசெயயவிலலையே, நீ இபபடிபபடட கெடடகதியை அடைநதது ஏன? இபபடிபபடடநிலைமைககு எனனகாரணம? அதைசசொல ராஜனே! நூறும ஆயிரமும மறுபடியுமநூறும எணணூறும பததுலக்ஷமுமான கோககளை முனனே பிராமமணாகளுககு நீதானமபணணினையெனறு கேடடிருககிறோம அநத உனபுணணியம எஙகேபோயிறறு?' எனறு கேடடாா அபபோது ந்ருகன கிருஷணனைபபாாததுசசொனனதாவது, 'அகநிஹோதரமசெயயுந பிராமமணனுடைய ஒருபசு அவனூரைவிடடுபபோயிருநதபோது எனபசுககளினகூடடததில தவறிவநதது, எனனுடைய பசுமேயபபவாகள ஆயிரமபசுககளில அதையும சோதது எணணினாகள மறுமைபபயனைவிரும்பி அதை நான் பிராமமணனுககுத தானமசெயதேன அநதபபசு எவனுக்குசகொடு

